சுபம்

# வேதாந்த சங்கிரகம்.

இஃது

திருநெல்வேலி

தளவாய இராமசுவாமிமுதலியாரவர்களால்,

இயற்றப்பெற்று

திருநெல்வேலி

பெரிய சங்கரநாராயணபிள்ளையவர்கள்

விருப்பத்தின்படி

திருநெல்வேலி

சித்திவிநாயகர்முத்திரியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது

1083-ம் ௵ கீலக௵ சித்திரைமீ

1908

## கிரந்தகர்த்தாவின் சரித்திரச்சுருக்கம்.

சுமார் முன்னூற்றைம்பது வருஷத்துக்கு முன் இந்திய சக்கரவர்த்தியாக இருந்த கிருஷ்ணராயரவர்கள் சமஸ்தானத்தில் அரியநாயகமுதலியாரென்றவர் தளவாயென்றும் பட்டம்பெற்று மந்திரியும் சேனாதிபதியுமாக இருந்தனர். அக்காலமுதல் ஆங்கிலேய அரசாங்கம் வருகிறவரை இத்தேசத்தையாண்ட கர்த்தாக்கள் நவாபுகள் காலங்களிலும் அவ்வண்ணமிருந்த ஷை தளவாய் அரியநாயகமுதலியாருடைய வம்சோத்பவரான தளவாய் குமாரஸ்வாமிமுதலியார், தளவாய் அழகப்பமுதலியார் முதலிய அநேகம் பெயர்களிற் கடைசியாக 1797ம் ௵ அந்திய காலம் வரை ஷை உத்தியோகம் இரண்டையும் வகித்தும் சில காலம்வரையில் சில ஜில்லாக்களிற் பிரதிநிதியாக இருந்தும் வந்தவர் தளவாய் இராமசுவாமிமுதலியார். இவருக்கு தளவாய் நித்தாரப்பமுதலியார் தளவாய் திருமலையப்பமுதலியாரென்ற இரண்டு புத்திரர் இருந்தனர். தளவாய் திருமலையப்பமுதலியாருடைய புத்திரர் மூவரில் இந்தக் கிரந்தகர்த்தாவாகிய தளவாய் இராமசுவாமிமுதலியார் தமது ஜேஷ்டபிதாவாகிய தளவாய் நித்தாரப்பமுதலியாருக்குச் சுவீகாரபுத்திரராயிருக்கின்றனர். இவர் கொல்லம் ஆண்டு 1012ல் பிறந்து தமது குடும்பத்தின் சிறந்த செல்வத்திற்கும் பெருமைக்கும் தக்கபடி சிறப்பாய் வாழ்ந்துகொண்டிருக்கும்போது ஏராளமான பொருட்செலவுடன் 1042ம் ௵ காசியா

த்திரைசெய்து வந்து, தீர்த்தயாத்திரை செய்து வந்த ஸ்ரீராமபிரான்வசிஷ்டமூர்த்தியிடம் ஞானோபதேசம் பெற்றது போல, தர்மராஜகுருவென்னும் விப்ரோத்தமரிடம் ஞானோபதேசம்பெற்று அபரோக்ஷ ஆத்துமாநுபவத்துடன் சுசுருபமாக விளங்குகின்றனர். இந்த கீழுத்த அவிபக்த குடும்பப்பெருமையும் நிர்வாகமும் இக்குடும்பமுன்னிலையாகத் தேவாலய பிரமாலய தர்மங்களும் சிறப்பாக நடந்துகொண்டுவரவேண்டுமென்று டை-வகைக்கு ஏராளமான மானியங்களை இக்குடும்பஆட்சியில் விட்டிருக்கிற மேற்கூறிய சக்கரவர்த்திகளின்கருத்து நாளதுவரை நிறைவேறிவருகிறது. இந்தக் கிரந்தகர்த்தாவாகிய தளவாய் இராமசுவாமிமுதலியார் தன்தம்பியர்இருவரில் முன்னவரான தளவாய் தித்தாரப்பமுதலியார் காலஞ்சென்றுபோகபின்னவராகிய தளவாய அழகப்பமுதலியார் குடும்பநிர்வாகமுதலியகாரியங்களை நடத்திக்கொண்டிருக்கச் சகவாசிரயபச ஜெகசாக்ஷியாய்ச் சுசுருபமாய்த் தனது ஜெனனஸ்தானமாகிய திருநெல்வேலி க்ஷேத்திரத்தில் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர்.

முற்றிற்று.

முகவுரை.

வேதாந்த சாஸ்திரப்பிரயாசிகளான முமுக்ஷுக்களில்

உ

சுபம்.

# வேதாந்த சங்கிரகம்.



## பிரம ஸ்துதி.

எல்லாமா யல்லவுமா யிருந்திருக்கிறதுவோ
அதுவாயிருந்து வாழ்வாம்.

## நூல்.

## வைராக்கியம்.

### அவதாரிகை.



ஜெகஜீவபரத்தின் குணதோஷங்களை நன்றாய் ஆராய்ந்து அதன் உண்மையை அறிந்து அதனிடமாக வைத்த பற்றுக்களை நீக்குந்தன்மையே வைராக்கியம்.

1. ஜெகமென்பது பஞ்சபூதங்கள் ஒன்றோடொன்று கூடிக்குழைந்த சேர்க்கையாலுண்டானது.

2. அச்செகமானது அண்டமெனவும் பிண்டமெனவும் இருவகைப்படும்.

3. அண்டமென்பது சீவர்கள் வாழ்தற்குரிய இடமான பிரபஞ்சாகிருதியாய் பூமி, மலை, ஆறு, கடல் முதலிய உருவங்களாக அமைந்துள்ளது.

4. பிண்டமென்பது தங்கள் தங்கள் கன்மத்துக்கு அநுகுணமாய்ச் சுகதுக்கரூபமாய் வருகிற போக போக்கியங்களை யநுபவிப்பதற்குச் சீவர்களெடுத்துக்கொண்ட நானாவித வேறுபாடுடைய எழுவகைத்தோற்றமான வுடல்களாம்.

5. ஜெகங்களும் உடல்களும் ஜடரூபமாயுஞ் சுதந்தரமாய்த் தொழிற்செய்யுஞ் சக்தியற்றதாயும் அழியத்தக்கதாயும் இருக்கின்றன.

6. ஜெகத்திலுந் தேகத்திலும் விருத்தி க்ஷயங்கள் ஆகிற பல வேறுபாடுகளை அபிமானிப்பதும் அததனாற் சுகதுக்கங்கள் உண்டாகுவதுமாக விருப்பதால் அததில் இச்சைவைப்பதனாலுண்டான பிரயோசனமான துன்பத்தை நினைத்து அபிமானத்தை நீக்குவதே அறிவாளிகளுக் கழகாகும்.

7. ஜீவர்கள் வாசனைவசத்தாய்ப் பலபல கன்மங்களையநுபவித்து அததனால் வருகிற இன்பத்திற் களித்தும், துன்பத்தில் வருந்தியும் பிரயோசனமொன்றுமின்றி ஓயாது பிறப்பிறப்பிற் சுழல்பவர்களாம்.

8. இன்பதுன்பத்திற் சமபாவனைபண்ணி ஆநந்திப்பதே விவேகிகளுக்குப் பொருத்தமானது.

9. பரமென்பது காலசக்தி முதல் நியதி சக்தியீறாகவுண்டான பலவித தேவதாரூபத்தையடைந்த

ஈசுராதிகளே.

10. ஈசுராதிகள் ஜீவர்களுக்குரிய கன்மபரிபாகத்துக்கேற்ப உடல்களைக்கொடுத்து அததற்குரிய கன்மங்களை யூட்டுவிப்பதும் நீக்குவிப்பதுமான கிருத்தியங்களையுடையவர்கள்.

11. கற்பம் பிரளயம் இவற்றிற் தங்கள் தங்கள் தொழில்களையும் பதவிகளையும் ஈசுராதிகள் விட்டுநீங்குவதால் அவர்களும் அநித்தியர்களே.

12. ஜெகசீவ பரம், மித்தை என்று அறிவதே வைராக்கியமாகும்.

வைராக்கியம் முற்றிற்று.

---

## முமுக்ஷுத்துவம்.

அவதாரிகை.

எத்தன்மையுடைய குருவை எத்தன்மையுடைய சீடன் சரணாகதியடைந்து பாசம்நீங்கிப் பரகதியடையக்கூடுமோ அவ்விதசீடன் அடையவேண்டிய சாதன சம்பத்துக்களையும் பரகதியடையும்வரை அவன் அப்பியாசிக்கவேண்டிய விதிகளையும் தெரிவிப்பது முமுட்சுத்துவமாம்.

1. ஆத்தும நிச்சயத்தைக் குருவாலன்றி யடைய முடியாது.

2. சுவாநுபவப் பரம்பரையில் உபதேசம்பெற்றவர்களாகவும் சாக்ஷாத்கார நிலையை யடைந்தவர்களாகவும் சரியை, கிரியை, யோகம், ஞானம், என்ற நான்கும் உபதேசிக்க வல்லவர்களாகவு மிருப்பவர்களே ஞானசாரியர்.

3. சரியை கிரியை யோகங்களிலும் பழகிச்சாதனம் நிறைந்தவர்களைப் பக்குவசோதனைசெய்து மகா வாக்கிய வுபதேசஞ் செய்யவேண்டும்.

4. மனது ஒருமையடைந்து கேட்பவர்களுக்கு ஞானம் போதிக்கவேண்டும்.

5 ஞானத்தைப் பெற்றவர்களும் விஸ்ராந்தியை விரும்பும் பக்குவர்களாவர்.

6. ஆத்துமாவிறரேறன்றின அறிவு அதில் ஒடுங்குமிடத முத்தியென்றறிந்து போகஇச்சை ஜெகக்காக்ஷிகளை நீக்கினவனே பக்குவன்.

7. அறிவதெல்லாம் அறிந்த மனதுக்கு அடைவு ஏதென்றால் போகங்களைத்தனதென்று எண்ணும் நினைவைத் தவிர்த்துநிற்றலாம். இதுவேபக்குவம்.

8. காளைப்பருவத்தில் உலகாசாரத்தை நீக்கித் தன்மனதிலுதித்த அற்ப விசாரத்தால் ஞானத்தில்

மனதை நிலைபெறச்செய்வது ஆச்சரியம்.

9. ஆசிரியரிடத்திற் சிரத்தையடைந்த சீடனுக்கே உபதேசம் பலிக்கும்.

10. பக்குவகாலத்திற்செய்யும் உபதேசத்தாலுஞ் சாஸ்திர ஆராய்ச்சியாலும் அறிவு உதயமாகும்.

11. மனது சாந்தமடைந்து போகங் கைத்து அஞ்ஞானம் நசித்தபோது சீடன்மனதிற் குருவாக்கியங் கலந்து ஞானம் உதயமாகும்.

12. அற்ப அறிவையுடையவர்களுக்கு ஞான சாஸ்திரத்தைப்போல எந்தநூலும் அஞ்ஞானத்தைக் கொடாது.

13. அபக்குவனுக்குக் கொடுத்த வாக்கியப்பொருள்கள் பயன்படமாட்டா.

14. உயிர்ச்சார்பு பொருட்சார்பு நீங்காதவர்களுக்கு இராச்சியபாரத்தைப் பார்க்கினுந் துறவே நன்மை பயக்கும்.

15. உபதேசத்தை விநோதமாய்க் கேட்பவர்களுக்கு ஒரு பிரயோசனமுமில்லை.

16. தத்பதம் அடையும்வரை சுருதி குரு சுவாநுபவத்தில் விடாமற்பழகவேண்டும்.

17. அறிவையுடையவர்களுக்குச் சாதுக்கள் சங்கமே பந்தத்தை நீக்கச் சகாயமானது.

18. யூகமுள்ள வசனங்களைச் சிறுவர்கள் சொன்னாலும் ஏற்றுக்கொள்ளவேண்டும்.

முமுக்ஷுத்துவம் முற்றிற்று.

---

## உற்பத்தி அல்லது சிரவணம்.

### அவதாரிகை.

சரணாகதியடைந்தசிடனுக்கு சற்குருவானவர் ஜக ஜீவபர உற்பத்திலயங்களைத்தெரிவித்து அநுட்டிக்கவேண்டிய மார்க்கங்களை உபதேசிப்பது சிரவணம்.

1. சைதன்னியத்தில் உதயமான சங்கற்பஞ் சைதன்னியமேயாகும்.

2. பிரமமே உல்லாச லீலையாற் சரீரமுடையவனைப்போலவும் புமானைப்போலவும் பிரகாசிக்கும்.

3. பிரமமாகிற நமது ஆத்துமாவே, பிரமமென்றுங் கூடஸ்தனென்றும் ஈசுரனென்றுஞ் சீவனென்றும் நான்கு சைதன்னியமாகும்.

4. சைதன்னியத்தில் உதயமான அறிவே ஈசுரனாகும்.

5. ஆத்துமா தன்மாத்திரா பூதத்துடன்சேர்ந்த போது மனமாகும்.

6. சங்கற்பத்தோடுசேர்ந்த ஆத்மா ஜீவனாகும்.

7. ஆத்தும சங்கற்பத்தில் உதயமான அறிவே

ஆகாயமுதலிய ஜெகத்தாகும்.

8. அறிவுக்கிசைந்த நானாவித வடிவங்களாய் எந்த இடத்தில் எப்படித்தோன்றவேணுமோ அப்படித்தோன்றுவதான ஜெகம் பிரமமேயாகும்.

9. ஆத்தும சைதன்னியமே ஜெகத்தைச்சிருஷ்டித்து அந்தந்தவடிவமாக நிற்கும்.

10. ஜெகசிருஷ்டிக்கு நியமமில்லை ஒவ்வொருகாலத்தில் ஒவ்வொருவரும ஒவ்வொருவிதமான சிருஷ்டி செய்வார்கள்.

11. மனதின் சங்கற்பமே தேகமாயுஞ் ஜெகமாயும் விளங்கும்.

12. மனம் ஒன்றிற்பற்றுமேயானால் தேகமும் அதன்றொழிலாக தோன்றுது.

13. சலனமற்ற மனதின் தியானமுதிர்ச்சியிற் தியானித்த பொருள்வடிவமாகிற தியானுநிதமுண்டாகும்.

14. காரண காரியமின்றி பிரமத்தினிடத்தில் உலகங்கள் தோற்றல்மாத்திரமாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது.

15. வேற்றுமையாய்த்தோன்றின செகசீவபரம் மூன்றும் அற்பமுமில்லாமல் நசித்தால் சைதன்னியமே தானாகவிளங்கும் அநுபவமுண்டாகும்.

ஜெகத்துக்கு ஆதாரமான அஞ்ஞானபூமி.

16. ஜெகஜீவபரத்தை யடக்கிவைத்துக்கொண்டு உதயமான அறிவே முதற்பூமியாகிற வித்துசாக்கிரம்.

17 அவ்வறிவே மாயையைத் தன்வசம்வைத்துக்கொண்டு தொழில்நடத்துவதே இரண்டாவதுபூமியாகிற சாக்கிரம்.

18. அவ்வறிவே அவித்தையிற்கலந்து சகல கிர்த்தியங்களையும் நடத்துவதே மூன்றாவது பூமியாகிற மகாசாக்கிரம்.

19. அவ்வறிவே தன்னைமறந்து தொழில்நடத்துவதே நான்காவதுபூமியாகிற சாக்கிரசொப்பனம்.

20. அவ்வறிவே தன்னைப் பூரணமாய் மறந்து விஷயமயமாய்நின்று தொழில் நடத்துவதே ஐந்தாம் பூமியாகிற சொப்பனம்.

21. அவ்வறிவே விஷயாகாரமாய் நின்று தொழில்நடத்தியும் ஒவ்வொருகாலங்களில் மறந்ததைத் திரும்ப நினைப்பது ஆறும்பூமியாகிற சொப்பனசாக்கிரம்.

22. அவ்வறிவே தன்னைப் பூரணமாய்மறந்து செகஜீவபரமாய் நின்று மயங்கித் தொழில் நடத்துவதே ஏழாம்பூமியாகிற சுழுத்தி. ஒவ்வொரு பூமியும் அநந்தபேதமாய் விளங்கும்.

23. மேற்சொல்லிய முதல் மூன்றுபூமியும் அறிவாகாரமாய் நிற்பதால் ஞானமாகிற சாக்கிரமாகும்.

24. 4, 5, 6, இம்மூன்று பூமிகளுந் தன்னைமறந்து தொழில் நடத்துவதாற் சொப்பனமாகும்.

25. ஏழாவதுபூமி தன்னை முற்றிலும் மறந்து மயங்கி விஷயாகாரமாய்நின்று தொழில்நடத்துவதாற் சுழுத்தியாகும்.

உற்பத்தி முற்றிற்று.

---

## ஸ்திதிப்பிரகரணம் அல்லது மனனம்.

### அவதாரிகை.

ஆசிரியர் உபதேசித்தவண்ணம் பலபல சாஸ்திரங்களைப்பார்த்து அதற்கும் இதற்கும் ஒற்றுமையாயிருப்பதை உணர்ந்தும், அதிலுண்டாகும் சந்தேகங்களை ஆசிரியரிடமும் சாதுக்களிடமும் வினவியும், தன் மனதில் அழுந்தும்படி செய்தல் மனனம்.

1. மனோவியாதியைச் சுழுவாய் நீக்கத்தக்க மருந்து சித்மனமே.

2. விசாரணையுந் தன்முயற்சியுமுடைய மனதின் உபசாந்தியே ஸ்திதியாம்.

3. முயற்சியினால் மனதைச் சித்தாகவுஞ் சட மாகவும் விளங்கும்படி செய்யலாம்.

4. மனதில் எந்தெந்தவாதனை யெப்போதெப் போது தோன்றுகிறதோ அப்போதப்போது அதை யழிக்கில் மனமாகிற மாயைகெடும்.

5. விவேகிகளாயிருந்தாலுந் தன்னைமறந்து எத் தொழிலைச்செய்யினும் பலத்தில் விழுவார்கள்.

6. மரணகாலத்தில் நினைத்தவண்ணம் ஜெனன முண்டாகும்.

7. சகலமும் நானேயென்றும், என்னைத்தவிர வொன்று மில்லையென்றுந், தேகமே நானென்றுஞ், சொல்லப்பட்ட அகங்காரம் மூன்றில் முந்தியவிரண் டும் நல்லது. பிந்தியவொன்று கெட்டது, நல்லதைக் கொண்டு கெட்டதை நீக்கவேண்டும்.

8. சரீரத்தை நானென்பதே யிருபத்தொரு நரகமுமாகும்.

9. உலகப்பொருள்களில் ஒன்றாவதுசதா இன் பத்தைக் கொடாததால் அதையறிந்தும் ஆத்துமவிசா ரணை செய்யாதவர்கள் மனிதவடிவமான கழுதையே.

10. சூரியனிடத்தும் புழுவினிடத்தும் ஞான மே நிறைந்திருக்கிறதென்ற அநுசந்தானம் எப்போ,

துஞ்செய்யவேண்டும்.

11. உலகத்திலுள்ள பொருள்களெல்லாம் ஆத்துமாவின்றிப் பிரகாசிக்காது.

12. ஞானமே ஜெகம்போலத் தோற்றுகிறது.

13. சப்தமுதலான விஷயங்களையறிவது எதுவோ அதுவே ஆத்துமாவாகும்.

14. அப்பியாசிகள் ஞானனுபவம் வருகிறவரை ஆசிரியர் வாக்கை நம்பிநடக்கவேண்டும்.

15. அஞ்ஞானமிருக்கும் வரை பிரமபாவனை வராது. உலக போகப்பிரமையிருக்கும்வரை மனம் முதலியவை நீங்காது.

16. மாயையை யுண்டாக்கினது ஜீவர்களிடத்தில் வைத்த கருணையே.

17. சித்சத்தி வாசனரூபமாயும் அஞ்ஞானரூபமாயு மிருக்கும்.

18. சத்துக்கள் தெரிசனமும் அநுக்கிரகமுமல்லாமற் பிரமசுகமான ஆத்துமலாபங் கிடைப்பது அரிது.

19. திரிலோகங்களிலும் தேடிப்பார்த்தாலும் ஜெகமென்பது பஞ்சபூதத்தைத்தவிர ஆறுவதுபூதமில்லை.

20. ஜெகமானது சத்தியமுமல்ல அசத்தியமுமல்ல. கனவின் றன்மைபோலாகும்.

21. சதா பிரிவற்றிருக்கிற ஆத்துமாவை யுணராதிருப்பது மாயையின் விசித்திரமே.

22. ஆத்துமாவினிடத்தில் அநந்த சக்திகள் தானேயுண்டாய்த் தன்றன்றொழிலைச்செய்து தானே லயப்படும்.

23. தன்னைமறந்த இடத்தில் உண்டான சங்கற்பங் காரணமாகக் கன்மமுண்டாகும். கன்மங் காரணமாகச் சென்மமுண்டாகும். கன்மத்தினுரிமையே சுகதுக்கங்களுக்குக் காரணமாகும்.

24. முக்குணத்தாலுண்டானது ஜென்மம்; தமோகுணத்தால் சோம்பல் நித்திரை மயக்கமும், ரசோகுணத்தால் காமக்குரோதாதி விருத்திகளும், சாத்விககுணத்தால் விடுதிக்கான சத்கிருத்யங்களுமுண்டாம்.

திதி முற்றிற்று.

## உபசாந்தி அல்லது நிதிதி.

அவதாரிகை.

மனனஞ்செய்தவண்ணம் நிட்சயித்து தன் அநுபவத்துக்குக்கொண்டுவந்து மனமானது சாந்தரூபத்தை அடையும்படி செய்வது நிதிதியாம்.

1. விருத்திஞானம் நீங்கிநின்ற அறிவே சுகாகாரமாக விளங்குகிறது என்பது முதலாவது மஹா வாக்கியக்கருத்து.

2. அவ்வறிவு சுத்த அசுத்த வாசனைநீங்கியாவுமாய்ப் பிரகாசிக்கிறது என்பது இரண்டாவது மஹா வாக்கியக்கருத்து.

3. அவ்வறிவு சத் தசத்தின் மத்தியில் வியாபித்துப் பிரகாசங்களுக்கெல்லாம் பிரகாசமாய் விளங்குகிறதென்பது மூன்றாவது மஹா வாக்கியக்கருத்து.

4. அவ்வறிவு ஒவ்வொரு சர அசர வடிவங்களிலும் நான் நானென்று விளங்கியும் இருந்தும் ஏகமாயும் அநேகமாயும் உள்ளதாயும் அல்லதாயும் பிரகாசித்து விளங்குகிறது என்பது நான்காவது மஹா வாக்கியக்கருத்து.

5. பலசாஸ்திரங்களைப் பார்ப்பதிலும் இச்சையை நீக்கமுயல்வதே நல்லது.

6. வாசனையை நிர்ப்பயமாய் நீக்குவது அறிவைத்தவிர மற்றவைகளால் முடியாது.

7. சங்கற்பமென்ற மனமே மாயாவிருக்ஷத்துக்கு வேராகும். அதைக்கெடுக்கவேண்டும்.

8. முயற்சியில்லாத விசாரணையினாலும் குரு உபதேசத்தாலும் ஆத்மலாபங் கிடைப்பதன்றிக்

கிரியையினாலாவது யோகத்தினாலாவது கிடையாது.

9. உலகமேது நாம் யார் என்று சத்துக்களுடன்சேர்ந்து விசாரிக்கும் விசாரணையே ஞானமாகும்.

10. உலகப்பொருள் ஒவ்வொன்றிலும் ஞானமாகிற வுன்சொரூபத்தை விடாதுபார்க்கவேண்டும்.

11. விராகம் விசாரணை அறிவு அநுபவம் இந்நான்கும் ஒருமித்து அப்பியாசிக்கவேண்டும்.

12. மனோநாசம் வாசனாக்ஷயம் பிரமஞானம் இம்மூன்றும் சமத்துவமாகப் பழகினாற் சிலநாளில் ஆத்மப்பிரயோசனமாகும்.

13. ஞானத்தையறிதல், சத்துக்களைச்சேர்தல், வாசனையை விடுதல், பிராணவாயுவை யடக்கல், இந்நான்கும் மனதைக்கெடுக்கும் வகையாகும்.

14. அத்துவித அப்பியாசபலமும் பிராணபந்தனமும் மனமடங்குதலும் இம்மூன்றுமாவது அல்லது ஒன்றாவது தவறாமற்பழகவேண்டும்.

15. மண்முதற் சகலவஸ்துக்களும் பிரபஞ்சமும் அவஸ்தைகளும் மதங்களும் மனத்திலிருப்பதன்றிப் புறத்திலில்லை.

16. மனம்பருக்கில் ஞானத்தூரத்தில் விலகும்.

17. மனதின்குளிர்ச்சிக்கும் கொதிப்புக்குந் தக்கபடி உலகந்தோன்றும்.

18. ஜெகவிர்த்திக்குத் தக்கதாய்ப் பரஞ்சடராகிய ஜோதிதோன்றும்.

19. மோகத்தில் வருந்துகிற ஜீவனை முத்தியிற் சேர்ப்பதே வல்லபத்திலும் வல்லபம்.

20. துரியநிலை யடையும்படி செய்வது தன்னுடைய முயற்சியேயாம்.

21. சரீரத்தைநம்புதலே பற்றுதல்; சகலமுஞ் சொரூபமாதலினால் இச்சிப்பதும், இகழ்வதும் நீங்கி நின்றநிலையே பற்றின்மை.

22. சடம் அசடம் இரண்டுக்கும் மத்தியிலிருக்கிற ஆத்தும தத்துவத்தைப் பிரமமென்றே வேதஞ் சொல்லுகிறது.

23. விடயமும் ஞானமும் பொருந்தின இடத்தில் உதயமான சுகமானது அநுபூதியின் சொரூபமான பிரமரசமென்று வேதஞ்சொல்லுகிறது.

24. பிராண பந்தனத்தினாலேயே நீண்ட ஆயுளுண்டாகும், வார்த்திகமும் மரணமுந் தூரத்தில் விலகும். யோகிகள் சித்திகளை விரும்புவதும் இதனாலேயே.

25. கற்பனாவிதை:— சம்சாரமாயைக்கு மூலம் தேகம், இதற்கு மூலம் மனம், இதற்குமூலம் இரண்டு; ஒன்று பிராணசலனம், மற்றொன்று வாசனையினமூர்த்தம். இவ்விரண்டுக்கும் மூலம் கிரியையே.

26. பிறவிதோறும் தொடர்ந்துவந்த வாதனைகள் வெகுகாலத் தியானப்பழக்கத்தால் நீங்கும்.

27. யுக்தியன்றி மனதையொடுக்க நினைத்தால் மனம் கொந்து ஒன்றையும் நம்பாமல் மருளும்.

28. அசத்தவாசனையிலும் அநாத்தும வர்க்கத்திலும் கலப்பதே துர்ச்சங்கமாம்; இதை யவசியம் நீக்கவேண்டும்.

29. ஜெகம் ஞானிகளுக்கு ஆனந்தமாயும் அஞ்ஞானிகளுக்குத் துன்பமாயுமிருக்கும்.

30. அறிவு யுக்தி முயற்சி யிவற்றாற்றான் சங்கற்பத்தைக் கெடுக்கவேண்டும்.

31. அகபூசையாவது பிரத்தியேக ஆத்துமாவைச் சதாதியானித்து அச்சன சயன வாகனாதி போக போக்கியங்களாற் சுதுக்கரூபமாய் வருகிற சகலவிருத்திகளையும் ஆத்துமசக்தியின் விலாசமாக எப்போதும் பாவனைசெய்வதேயாம்.

32. பரிசவேதியாற் றும்பிரந் தங்கமாவதுபோல ஞானத்தால் மனம் நிர்மலமாகும்.

33. விடயங்கள் எவ்வளவுக் கெவ்வளவு நீங்கிற்றோ அவ்வளவுக் கவ்வளவு ஆனந்தமுண்டாகும்.

34. ஞானம் உதயமானால் அன்பினை மேலுக்குமேல் விருத்திபடைச் செய்யலாம்.

35. மூல இச்சையைக் கெடுத்து மனோநாசம் ஆகாதவரையிலும் பிறப்பகலாது.

36. ஜெகம் சுத்தவாசனையாலன்றித் தன்மய மாகாது.

37. யான் எனது என்றதோற்றம் வந்தபோது சொரூபசிந்தனையால் நீக்கவேண்டும்.

38. தேகம், இந்திரியம், பிராணன், கரணம், அவித்தையாதிகளை நீக்குவது, நியதிகளைதலாம்.

39 அநாத்துமவர்க்கங்களை நீக்கிநின்ற, அறிவைத்தெரிசித்தல் தொம்பத தெரிசனம்.

40. அவ்வறிவு அகத்தோடுங்கூடி யெல்லாமாய் நிற்கிறேமென்ற நினைவுந தவிர்ந்துநிற்பது தத்பத தெரிசனம்.

41. எல்லாமாயும் அல்லவாயும் வேறுந்தெரிவாய்க் கர்த்தத்வம் போக்தத்வமின்றி நிற்பது அசிபத தெரிசனம்.

உபசாந்தியில் நிதி முற்றிற்று.

## உபசாந்தியிற் சமாதி.

அவதாரிகை.

அநாத்மவர்க்கங்களைக் களைந்து சேடித்து நின்ற ஆன்மாவைத் தெரிசித்து அபரோட்சமாய்ப் பிரத்தியேகசூக்ம சொரூபமாக விளங்குவதே சமாதியாம்.

1. ஆசிரியர் உபதேசித்தவண்ணம் தான்றனித்திருந்து சிந்தித்து உலகங்களும் ஸ்தாபித்திருக்கிற கிரியைகளும், காக்ஷிப்பொருள்களும், பிரமமேயென்றும் அதுவே நானென்றுந் தெரிந்து ஒருமைபடைந்த மனமாய் அறிவாகாரமாக நிற்பதுவே சமாதி.

2. ஈசுராநுக்கிரகத்தால் விசாரந்தோன்றி மனனத்தால் அநாத்தும வர்க்கத்தைக் களைந்து சேடித்து நின்ற அதுவே தானும், தானே யதுவாயு மிருக்கிற வொருமை யிரண்டென்பதாய்ப்பிரிந்து திரும்பவும் ஒன்றாகி அதுவே தானாகவும் தானேயதுவாகவும் ஐக்கியமாக இருக்கிறேமென்றுதெளிந்து அறிவில்லாத தேவே ஜெபவென்று தோத்தரித்து வஸ்துநிச்சயஞ் செய்து தானே தானாக விளங்குவதே சமாதி.

3. பிரணவ உச்சாடணத்தால் அகார உகார மகாரங்களால் உண்டான ரேசக பூரக கும்பகங்களின் வழியாய்த் தேகத்தை நிலைபெறச்செய்து மனவொருமையினாற் கூடஸ்த பிரமமாக நிற்பதுவே சமாதி.

4. சகலபற்றுக்களையும் நீக்கிநின்றபோது சில விகற்பங்கள் தோன்ற அததற்கெதிரடையால் அந்தந்த விகற்பங்களை நீக்கச் சேடிக்கும் ஆத்துமா மாத்திரமாக நிற்பதுவே சமாதி.

5. மனம் ஒருமைபடைந்தபோது பிரணவத்தை

யுச்சரித்து அந்த நாதத்தொனியுடன் விருத்திஞானத் தைக்கரைத்துத் தானாகச்சேடித்து நிற்பதுவே சமாதி.

6. சிரவண மனனத்தால் நிச்சயித்து மேலே சொன்ன பிரகாரமன்றியும் பின்னும் பலவித தந்திரங் களைக்கொண்டு சமாதி கூடுவதும் சாம்பிரதாயமாக இருக்கிறது.

உபசாந்தியிற் சமாதி முற்றிற்று.



## நிர்வாணம் அல்லது சாக்ஷாத்காரம்.

### அவதாரிகை.

சமாதியின் சமஸ்காரம் விலகாமல் கண்டமா யும் அகண்டமாயும் விளங்குவது நம்மையன்றி வேறு இல்லை என்று சர்வசாக்ஷியாய் விளங்கித் துரியாதீத பதத்தில் நின்று ஜகத்வியாபாரத்தில் பிராரப்த கன்மவசத் தால்வருகிற எவ்வித கிருத்தியங்களையும் செய்தும் செய்யாமலும் எல்லாமாயும் அல்லவாயும் இருந்து தா னே தானாக விளங்குவதே சாக்ஷாத்காரமாம்.

1. எது சரீரத்தை யசைக்கிறதோ, எது பிறவிக் குவித்தா யிருக்கிறதோ, அதுவே மனமாகும். அதை மூலத்தோடே விட்டுவிடவேண்டும், அதுவே சகலத் தியாகமாகு

2. சன்மார்க்கத்தால் மனதுக்கு மூலமான அகம் பாவத்தைக் கெடுப்பதே மனமுண்டாகாமையாகும்.

3. மல்லிகைப்பூவைக் கசக்கவாவது வருத்தமுண்டு அகங்காரத்தைக்கெடுக்க அவ்வளவுகூட வருத்தமில்லை

4. அவித்தை நாசமானால் மனம் நாசமாகும். இது மனத்தின் உருவநாசம். இதனையடைந்த மனம் உண்மையென்ற பெயரைப்பெறும். இதில் மைத்திரியாதி குணங்கள் விளங்கும். இதுவே ஜீவன் முத்தி.

5. மைத்திரியாதி சாத்திக குணநாசமே அருவ நாசம். இதுவே விதேகமுத்தி.

6. வழிநடக்கிறவன் மனதின்றி யொன்றைப் பார்க்கும்போது அந்தஇடத்தில் எந்தப்பார்வை நிறைந்திருக்கிறதோ அதுவே வியாபகஞானமாகிய பிரமமாம். அதுவே நாம்.

7. ஞானத்தின்கண் உலகங்கள் யாவும் பொருந்தியிருத்தல் பலவித ரேகைகள் பொருந்திய வொரு சிலையைப்போல வேறுபாடற்றதாகும்.

8. சித்தானது ஜீவனென்ற நாமத்தையடைந்து புரியட்டக சரீரத்தையுடையதாய்ச் சொப்பனத்தின் மேற் சொப்பனந்தோன்றுவதுபோல நானாவித கற்பனையான உலகமாகவிளங்கும்.

9. அறிவுக்கறிவாயுள்ள ஆத்துமா அநுபூதியினாலேயே வியாபிக்கும்.

10. ஆத்துமாவானது அநுபூதியினாலாய்க் காணப்படும் பொருள் போல ஞானவான்களுக்குத் தோற்றப்படும்.

11. சகல வஸ்துக்களிலும் உள்ளும் புறம்பும் ஆத்துமப்பிரகாசம் விளங்கும்.

12. உண்மைவிதை:— திரிசியத்துக்கு வித்து அறிவாகிற சித்து, சித்துக்கு வித்து சத்து, சத்துக்கு வித்து துரியம், துரியத்துக்கு வித்து அத்துவைதம். இதற்கு வித்தில்லை

13. புறபூசை:— ஞானம், சமபாவனை, சந்தோஷம், என்கிற புஷ்பங்களால் ஆத்துமதத்துவத்தைத் திரிகரண சுத்தியாய்ச் சதா விடாது தியானிப்பது சுயம் பிரகாசமான ஞானத்தெய்வ புறபூசையாம்.

14. கர்த்தாவும் உலகமும் ஒன்றுசேர்வது சகல வுயிர்களுக்கும் பொதுவானாலும் அதினுண்டாகிற ஞானசம்பாதத்தைத் தனதுசொரூபமாகக் கிரகிப்பதே ஞானிகள் ஞானாத்துமாவுக்குச் செய்யும் பூஜையாகும்.

15. விடயங்கள் நினைவுக்கு வராமலும் நீங்காமலு மிருக்கும்நிலையே ஞானியின் அநுபவமாகும். இதுவே சத்தியர் சாமானியம்.

16. ஆத்மாவின் ஸ்வபாவமான அறிவு ஸ்வரூபமடையாமல் சமமாய்ச் சொச்சமாய்ச் சர்வவியாபகமாய் விளங்குவதே ஞானியின் அநுபவமாகும். இதுவே சித்த சாமானியம்.

17. ஞானிகளின் மனம் பிரமசொரூபத்தைத் தவிர வேறில்லை.

18. உடல்போகுபட்டும் உடலின் வாசனையும், உலக விவகாரமும் நீங்காது

19. சகலமுஞ் சிதசொரூபமே. அதன் பலசக்திகள் ஜெகமாய்ப் பிரகாசிப்பதால் ஜீவன்முக்தர்கள் ஒன்றிலும் அதிசயப்படார்கள்.

20. ஜீவன்முக்தர்களுக்கு இச்சையில்லாததால் அவர்கள் மாயாகாரியமாகிற சித்திகளை விரும்பார்கள்.

21. சத்துக்கள் சம்சாரத்தில மனமும் நல்ல நினைவு மிருந்து மில்லாதவர்களே.

22. அநுபூதியுடையவனுடைய வுள்ளங் காரிய வசமாயலைந்தாலுங் கவலையுறாது.

23 சத்துரு மித்துருவாயுள்ள போகமுதலனை யாவும் விசாரணையடைந்த மனதை யசைக்கமாட்டாது.

24. கிரியத்தை யடையாத ஞானத்தை யடைந்தவிலையே, எவ்வித தொழிலைச்செய்தாலும் கிரியையும் விர்த்திஞானமும் நீங்கின ஆத்மாவாகும்.

25. ஆநந்தம் நீங்கி ஆத்துமாவில் லயமடைந்த போது சரீரத்தொழில், திரிசியம், ஆநந்தம், ஒன்றும் அறியாதிருப்பதே சதாநந்தமாகும்.

26. மனந்தெளிந்து பலபோகங்களைப் புசித்தாலுந் துன்பஞ்செய்யாது.

27. யுகம் அழிந்தாலும் ஆசிரியர் உபதேசித்த வாக்கியார்த்தப்பொருளை ஞானவான்கள் மாறுபடுத்தார்கள்.

28. ஞானவான்கள் நீண்டகாலச் சமாதிப்பழக்கத்தால் நின்மலமனதினால் ஒருபொருளை நினைத்தால் அப்போது அவ்வண்ணமாகும்.

29. விடயசுகமில்லாத ஞானமானது சதாகாலமுந் தொடர்ந்திருக்குமானால் தெளிவான போகங்களும் மோக்ஷமு மடையலாம்.

30. மனம் நசித்தவர்களைத் தேவர்களும் அன்பினாற் சிநேகிப்பார்கள்.

31. ஜீவித சுகதுக்கங்கள் அநந்தம் நேர்ந்தாலும் சம்சாரப்பிரமையானது சத்துக்களை யவற்றில் அழுந்தச் செய்யாது.

32. பக்ஷியின் சிறகைப்போலச் சுகதுக்கங்களுண்டாகும்போது ஏககாலத்திலுண்டாய் ஒன்று மற்றொன்றால் அழியும்.

33. தன்முயற்சியினாலுண்டாகும் பகிர்முக அந்தர்முகத் தொழில்களில் விருப்பு வெறுப்பின்றிப் பலாபேக்ஷையைவிட்டுச் சமமாய்த்தொழிற் செய்பவனே மாகர்த்தன்.

34. அசன சயன முதலிய போகபோக்கியங்களிலுண்டாகிற சிறுமை, பெருமை, நன்மை, தீமை, குணம், தோஷம், உணராமற் சமமாய்ப்போகங்கள் புசிப்பவனே மாபோகி.

35. ஏடணைகளிலுண்டாகிற சகலவஸ்துக்களிலும் பிராணிகளிலுந் தனது அந்நிய மென்றுணராமல் நிர்விகாரியாய் எல்லாவற்றையும் தியாகஞ் செய்துஞ் செய்யாதவனே மாத்தியாகி.

36. மூடப்புத்தியும் விரிந்த ஆசையு மில்லாததால் ஞானிகளின் மனம் நின்மலமாய்ச் சுகபோதமாய் இருப்பதே யவர்களுக்கு அடையாளமாகும்.

37. ஜெக விவகாரங்களில் யார் யார் எப்படி எப்படி விளங்குகிறார்களோ அப்படி அப்படியே அவரவர்களிடம் விளங்கிப் பற்றின்றி யிருப்பதுவே ஞானியின் வல்லபம்.

38. போக மநுபவிக்கப் புமானுக்குப் பொருந்தினது ஸ்தூலதேகமாகும். சங்கற்பாகாரமாய் இன்பதுன்பத்தைக் கொடுக்கிற மனமானது சூக்கும தேக

மாகும். ஆதிமத்தியாந்த ரகிதமாயுள்ள ஞானமே மூன்றாவது சரீரமாகும். இதைப் பிடித்துக்கொண்டு மற்றிரண்டையும் விடல் வேண்டும். இதுவே துரிய பதமாகும்.

39. மோக்ஷமாவதுயாதோ? தேச, கால, வஸ்து முதலியவை யல்ல. அகங்காரத்தால் நானென்ற மயக்கத்தைக்கொடுக்கிற மனம் நாசமடைவதேயாம்.

## ஞானபூமி.

40. ஜெக, ஜீவ, பர, மூன்றும் மித்தையென்றறிந்து பந்தத்தை நீக்கமுயன்று சாதுசங்கத்திற் சேர்ந்து விசாரணை செய்வதே முதற்பூமியாகிற சுபேச்சை.

41. ஆசிரிய ருபதேசம்பெற்று சாதுக்களின் சேர்க்கையாலுண்டாகும் வாக்கியார்த்த நுட்பங்களை யூகித்தறிந்து அதை அநுசந்தானஞ் செய்வதே இரண்டாம் பூமியாகிற விசாரணை.

42. இவ்விரண்டின் பழக்கத்தாற் புறப்பற்று அகப்பற்றுக்களை நீக்கி பதார்த்த வாசனைகளைக் களைந்து பிரத்தியகாத்துமாவாய் நின்று சமாதி பழகுவதே மூன்றாம்பூமியாகிற தநுமானசி.

43. சமாதிப்பழக்க விசேடத்தால் ஆத்துமானுபவம் விளங்கி நிற்றல் நான்காம் பூமியாகிற சத்துவாபத்தி.

44. எப்பொழுதும் அகமுகமாய் ஜெகத்தோற்றமற்று ஆநந்தாநுபூதியாய் விளங்குவது ஐந்தாம் பூமியாகிற அசம்சத்தி.

45. ஆநந்தமாய் விளங்குகிறோமென்ற நினைப்புமற்று ஒன்றிரண்டன்றி அத்துவிதமாய் விளங்குவது ஆறாம் பூமியாகிற பதார்த்தபாவனை.

46. வெறுந் தெரிவாய் அபிநலற்று இருந்தவண்ணமிருப்பது ஏழாம்பூமியாகிற துரியம். இந்த ஞானபூமிகள் ஒவ்வொன்றிலும் அநந்த பேதமுண்டு.

47. முதல் மூன்று பூமிகளும், ஜெகஜீவபரம் நீங்காததினாற் பஞ்சாவஸ்தையாகப்பிரித்துப்பார்க்கும் போது, அஞ்ஞான ஜாக்கிரமாம்.

48. நான்கு, ஐந்து, ஆறு, ஏழு இந்தப்பூமிகள் சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதமாகும்.

49. முதலாவது ஞானபூமியை அடைந்தவர் மெல்லமெல்ல முயன்று ஏழாவதாகிய துரியாதீத பதத்தையும் அடைவர்

50. முதல் மூன்றுபூமிக்குள் மரணமடைந்தவர்கள் தங்கள் தங்கள் கன்மத்துக்கு அநுகுணமான ஜென்மங்களை யெடுத்து, அதற்குரியபோகங்களை யநுபவித்து, அசுத்தவாசனையைக் கொஞ்சங் கொஞ்சமாக

நீக்கிச் சுத்தவாசனையை அதிகப்படுத்தி, பவரா்ர் பக்குவத்துக்கேற்பச் சிலசில ஜென்மங்களில் முக்தியடைவார்களென்பது திண்ணம்.

51. சகல சாஸ்திரக்கருத்தும் எதுவென்றால் சதா வொரேதன்மையும் உபசாந்தமுமான பிரமமே நித்தியமாயுள்ளது. அதன் அபின்னமான சக்தியின் விலாசமே ஜெகமாகத் தோற்றிக்கொண்டிருக்கும். அக்கராரசத்தால் ஜெகத்தோற்றம் நீங்கி வுவைமை, ஆறுடு, செவிடு, ஒத்திருப்பதுவே முக்தியாகும்.

52. சொப்பிரகாசமான ஞான சொரூபமே அண்டபிண்ட சராசரங்களாய்ச் சத்தாய் நிர்[illegible]மாய்த்தானுயிருக்கிற அத்துவிதானுபவமே [illegible]த்தியாகமாகும். இதுவே ஞானக்கரு[illegible]

நிர்வாணப்பிரகரணம் முற்றிற்று.



வேதாந்தசங்கிரகம்.

சம்பூரணம்.